உ

கணபதிதுணை.

# கொற்றவன்குடி

# உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

# திருவருட்பயன்மூலமும்




---

# நிரம்பவழகியதேசிகர்

அருளிச்செய்த

உரையும்.

---

இவை

ஞானபானுசங்கத்தார்

அனுமதிபெற்றுக்கொண்டு;

சுதேசபுத்தகசபையாரால்

வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

சென்னபட்டணம்.

ஆங்கிரசஹூ தைமீ

1933




உ

கணபதிதுணை.

நேசத் தடியர் நினைந்துருகி நின்றிட்ட
வாசத் தளைகடக்க மாட்டாது - பாசத்
திருகோட்டு முக்கட் சிவபெருமா னீந்த
வொருகோட்டு நால்வாயு வா.

# சிறப்புப்பாயிரம்.

## நேரிசை யாசிரியப்பா.

திருமகள்பிறந்த விரிதிரைப்பாற்கடற்
சூறையங்கடுங்காற் சுழற்றுபுவெடுப்ப
வலைவறவெழுந் தண்டமீப்படர்ந்து
நிலைபெறநின்ற நெடுந்திரளன்ன
வின்னறீரின்ப நன்னலஞ்சுரத்தலின்
விளங்கெழிற்றருமந் திரண்டுவீற்றிருந்த
வண்ணமும்போலு மண்ணறன்கயிலை
காவலிற்புரக்குங் கண்ணுதற்கடவு
ணந்திதான்சுமந்து வந்தவழித்தோன்றற்
பெண்ணையாறுடுத்த வெண்ணைநின்றுருத்த
தொண்டர்களிதய முண்டகமலர்த்தும்
விஞ்சைவாளிரவி மெய்கண்டதேவன்
மறையகத்தடக்கிய ஒருதனிக்குடிலையு
மருணூனிறைந்த பொருண்முழுதுணர்த்து
மாடிபோலக் கூடியகாட்சியிற்
புகல்சிவஞான போதநூறொகுத்த
வகல்பொருடேர்தற் கருமையுமாங்கவன்
சம்பிரதாயத் தந்தமில்வான்பொரு
ளுலவாப்பெருங்களி யுள்ளம்படைத்த
பண்பின்மேதகைய சண்பையர்கோமான்
றற்பலன்றேராய் பற்பலசமயிகள்

மலைத்தலைக்கொண்மூ மாருதமறைந்தெனத்
தலைத்தலையிரியத் தானினிதுரைத்த
புகழ்சிவஞான போதமுள்ளுறையாந்
திகழ்சிவஞான சித்தியின்விரிவு
மென்போன்மருண்ட புன்புலமாக்க
ளிராவிடும்பையுந் திருவுளங்கொண்டுதன்
னாராக்காதலி னூக்கியோனாகப்
பாவிடங்கொண்டதன் னாவிடங்கொண்டு
பவப்பிரகாசப் படரிருள்விழுங்குஞ்
சிவப்பிரகாசத் திருப்பெயர்மேவித்
திசைமகண்மருங்கிற் பரிவுடன்வளைத்த
நரலையின்றொகைக்கு நான்மடங்குடைய
சைவநூற்சலதி னொய்தினிற்கடந்து
மரக்கலமதற்கு மாலுமியொப்ப
வெழிலீரைந்தும் வழுவறப்புணர்த்தித்
தெள்ளுசீர்ப்புலமை வள்ளுவன்றனக்கோர்
நற்றுணையுடைத்தெனக் கற்றவர்களிப்ப
வருட்பயனென்று வதற்கொருநாமந்
தெருட்படப்புனைந்து செந்தமிழ்யாப்பிற்
குறளடிவெள்ளை யொருநூறியம்பினன்
மற்றவன்புலியூர் வளநகர்க்கீழ்பாற்
கொற்றவன்குடியிற் குடிகொண்டுறைந்த
பூசுரனுறைந்த புதுமதிவேணியுங்
காசறுங்கண்டமுங் கரந்த
தேசிகனுமாபதி சிவனென்பவனே.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பயன்.

மூலமு முரையும்.

---

உமாபதிசிவனென்னும் பிள்ளைத் திருநாமத்திற்கும் இந்நூற்கும் முதல்வராகிய கொற்றவன் குடிமுதலியார், அறம் பொருள் இன்பம் வீடு என நான்கினுள் வீட்டு நெறிகாட்டுவான் தம்மாலெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கியம் இடையூறின்றியினிது முற்றுதற் பொருட்டு ஆதிக்கண்ணே கரிமுகக் கடவுளை வணக்கஞ் செய்தருளுகின்றார்; வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கணவிலக்கியம் இடுக்கணின்றி யினிதுமுடியுமென்பாராகலின்.

காப்பு.

விநாயகர்வணக்கம்.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

என்பது, அடைந்தோர்பாற்செய்யு நல்லருளினையு டைய யானைமுகத்தினையும், என்று மொருபடித்தாயி ருக்கும் இளமையினையும், பெற்ற கடவுளை ஒருவர் மனமொழிமெய்களால் வந்திப்பாராயின், அவர்க்குவே தாகம புராண முதலிய கலைகள் யாவும் வருந்திக்கற் கும் பண்டமல்ல வென்றவாறு.—தானே யெளிதின் வரு மென்பதாம்.

உலகத்தானைகளெல்லாம் அடைந்தோர்பாற் றுன்ப ஞ்செய்தலின்,—இதனை, நற்குஞ்சரக்கன்றென் றருளி ச்செய்தார். யானையறிந்தறிந்தும் பாகனையே கொல் லுமென்றறிக. இஃதாகுபெயர்.



# நூல்.

## முதலாவது

## பதிமுதுநிலை.

அஃதாவது, மேலாகிய இறைவனது இயல்பு.

(குறள்வெண்பா.)

க. அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

(எ-து.) அகரமாகியவுயிர், எழுத்துக்க ளெல்லாவற்றினும் பொருந்தி வேறற நின்றாற்போலத் தனக்கோர் உவமனில்லாத் தலைவன் உலகுயிர்முழுதும் ஒழிவற நிரம்பி ஞானவுருவாய் அழிவின்றிநிலைபெறுமென்றவாறு.

அகரம், தானேதனித்தும் ஏனையுயிருடம்புக ளெல்லாம் வேறின்றிப்புணர்ந்தும் நிற்றலானும், அங்ஙனம் புணர்ந்த வழியுந் தன்னுருவுதோன்றாதாகலானும், முதற்கண் வைக்கப்படுதலானும், விகாரமின்றி நாதமாத்திரையாயியல்பாற் பிறத்தலானும்,இறைவற்குவமையாயிற்று. இவ்வொப்புவமையாற் சடமாகியவொலி வடிவன்றென்பதற்கு அறிவாகியென்றும், அகரம்போலவொருகாற் புணர்ந்து நீங்காதென்பதற்கு நிறைந்தென்றும், அவ்வகரமுதலிய வெழுத்துக்களு முட்படுதற்கெங்குமென்றும், மாணாக்கற் கறிவித்தற் பொருட்டு உவமனொடு புணர்த்தினும் அன்னதன் றென்பதற்கு நிகரிலென்றுங் கூறியருளினார்.

"அக்கரங்கடோறுஞ் சென்றிடு மகரம்போல நின்ற னன் சிவனுஞ்சேர்ந்தே" என்றருளிச் செய்தவாறு காண்க.

இதனுலிறைவனது உண்மையும், அவன் வேறற நின்றமையும், கூறப்பட்டன. (க)

உ. தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ் சத்தி, பின்னமிலா னெங்கள் பிரான்.

(எ-து.) வாக்குமனங்கட் கெட்டாத தனது விமல வானந்த வீட்டினெல்லையை நிலைபெற்ற ஆன்மாக்க ள்வந்து பொருந்தும்படி செய்யும் அருளாகிய பராச த்தியுடனே பேதமின்றி யொன்றி நிற்பான் எம்முடை ய இறைவனென்றவாறு.

மன்னுயிர்களென்றதனுல் ஆன்மாக்கள், வினைவயத் தில் உருவுந்தொழிலும் வேறுபடுவதன்றி நிலமுதல் நாத மீறுகிய தத்துவங்கள்போலப் பிறந்திறப்பன வல் லவாம்.

இதனுல் அவன் ஓர் சத்தியோடும் கூடிநிற்ப னென்பதும், அது கருணைவடி விற்றென்பதும், கூறப்பட்டன. (உ)

ங. பெருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி, னருமைக்கு மொப்பின்மையான்.

(எ-து.) எவ்விடத்துமுளதாய நிறைவினுனும், நேர்மையினுனும், மிகுந்தகருணையினுனும், ஒருத்தராற் பெறுதற்கருமையானும்,—ஆயவிந்நான்கினுந் தனக்கோரொப்புவமையில்லாதான் முன்னங்கிளந்த எம்மிறைவன் என்றவாறு.

இவ்வாற்ருல் தனக்குவமனில்லாஞகவே மற்றனேத்தியல்பினுனும் ஒப்பிலனுதலினுல் உய்த்துணர்க.

“ அண்டப்பகுதியி னுண்டைப்பிறக்க
வளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
யொன்றினுக்கொன்று நின்றெழில்பகரி
னூற்ளெருகோடியின் மேற்படவிருந்தன
வின்னுழைக்கதிரின் றுன்னணுப்புரையச்
சிறியவாகப்பெரியோ னெனவும்
பெருமைக்கண்டமணுத்தர வணுவண்டத்து
நின்றுநுணங்கிய தண்டாச்சீர்த்தி”
எனவு மருளிச்செய்தவாறு காண்க.

குவ்வுருபு மூன்ரும்வேற்றுமைப் பொருள்தந்தது, “யாதனுருபிற் கூறிற்ருயினும், பொருள்சென்மருங்கின் வேற்றுமைசாரும்” என்பதிலக்கணமாதலின்.

இதனுலிறைவனது உயர்புகூறப்பட்டது. (௫)

௬. ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

(எ-று.) இனையனாகிய அக்கடவுள் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட வுலகங்க ளெல்லாவற்றி னையும் படைத்துநிறுத்தி யிச்சா ஞானக் கிரியைக ளுணராத வண்ணம் ஆன்மாக்களெல்லாம் மூலமலத்து டனே அடங்கியிருக்கும்படி அழித்தலைச் செய்யுந்தா ன் எஞ்ஞான்று நீங்காததோர் புகலிடமாயிருக்குமெ ன்றவாறு.

ஆசுடனடங்கவென்றதனால், புனருற்பத்தி யுண்டெ ன்பது கூறியதாயிற்று. "உயிரவையொடுங்கிப்பின்னு முதிப்பதெ னரன்பாலென்னிற் - செயிருறுமலத்தினாகும்" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனால் அவனொருவனே முத்தொழிற்கும் உரியனென்பது கூறப்பட்டது. (௨).

ரு. அருவு முருவு மறிஞர்க் கறிவா முருவு முடையா னுளன்.

(எ-று.) சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவ டிவு நான்கும், மகேசுரன் உருத்திரன் மால் அயனெ ன்னும் உருவடிவு நான்குமுடையன், அவ்விறைவன் அறிவுடையாரது உள்ளத்தின்கண் தோன்றும் ஞான வுருவினையு முடையனாகலான் என்றவாறு.

அருவும் உருவும் உள்ளானெனவே அருவுருவாகிய சதாசிவ வடிவமென்பது கூறவேண்டாவாயிற்று.

"சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழுமீச-னுவ ந்தருளுருத்தி ரன்றான்மாலய னென்றினென்றும்." என்றுங் "குறித்ததொன்றாக மாட்டாக்குறைவில னுத லானும்." என்றும் அருளிச்செய்தவாறுகாண்க.

இதனு லவனறிவுருக் கூறப்பட்டன. (ரு)

௬. பல்லா ருயிருணரும் பான்மையென மே
லொருவ, னில்லாதா னெங்க ளிறை.

(எ-து.) நிறைந்து எண்ணிறந்த ஆன்மாக்களும் அறிவிக்கவறியும் பகுதிபோலத் தனக்கு மேலாய் நின்று உணர்த்துவதோர் கடவுளை யில்லாதான் எம்முடைய இறைவன் என்றவாறு.

இதனுற் கடவுட்டன்மை யொருவராற் பெருது இயல்பாகவுடையன் என்பது கூறப்பட்டது. (௬)

௭. ஆனு வறிவா யகலா னடியவர்க்கு
வானுடர் காணு தமன்.

(எ-து.) நீங்காத ஞானமாய் அடியார்கள் உள்ளக்கமலத்தினைவிட்டு ஒருபொழுதும் பிரிதல்செய்யான், தான் தேவர்களால் காண்டற்கரிய மேலோனுயினும் என்றவாறு.

அடியவரெனவும், வானுடரெனவும்," பொதுப்படக் கூறினமையால் யாவராயினும் அன்பர்க்கெளியவனுத

லும், அன்பரல்லாதவர்க்கு அரியனுதலும், உடையன் என்பதாம்.

“கனவிலுந்தேவர்க் கரியாய்போற்றி,நனவிலுநாயேற் கருளினைபோற்றி”. என்றருளிச்செய்தார் ‘போதவூர் புகழகம்போர்த்த மெய்யன்பின், வாதவூர் வந்தமறை முதற்றலைவர்’.

இதனுல் அவன் அருள்புரியுமாறு கூறப்பட்டது. (எ)

அ. எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகந் தங்கு மவன்றுனே தனி.

(எ-து.) எல்லா வுலகங்களிடத்தும் அளவிறந்த வுயிர்கண்மாட்டும் நீரிடைநின்ற தழல்போல இரண்டறக் கலந்திருந்தானுயினும் அக்கடவுள் அப்பதங்களிற் றங்காது நீங்கி யேகனுய் நிற்பன்என்றவாறு.

ஏகாரம்-பிரிநிலே.“பார்பதமண்டமனைத்துமாய்” என்பதனுள் “நீருறுதீ” என் றருளிச்செய்தவாறுகாண்க.

நீருறுதியென்பது, காய்ந்த புனலின்கணுளதாயவெம்மை.

இதனுல் யாண்டுநிரம்பி நிற்பினும் அதிற்றேயானென்பது கூறப்பட்டது. (அ)

கூ. நலமில னண்ணுர்க்கு நண்ணினர்க்கு நல்லன், சலமிலன் பேர்சங் கரன்.

(எ-து.) தன்தாளினை யடைந்தார்மாட்டு நன்மையி னைச்செய்தலும், அதுசெய்யார்மாட்டு அதுசெய்யா திருத்தலும், உடையனாயினும் வயிரமென்பது சிறிதுமில ன்; இன்பத்தினைப் பண்ணுஞ்சங்கரனென்னும் பெயரி னையுடையான்ஆகலான் என்றவாறு.

வடமொழியில் சம் என்பது சுகம், கரன் என்பது பண்ணுவான். இவையிரண்டும் புணர்ந்து சங்கரனென நின்றது.

இதனால், விருப்பு வெறுப்பிலனென்பதும், அவரவர் செய்திக்கொத்த பயனுதவும் நடு வுநிலைமையை யுடையவனென்பதும்,கூறப் பட்டன. (கூ)

க0. உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது மன்னுபவந் தீர்க்கு மருந்து.

(எ-து.) ஞானமயமாய்ப் பிரிப்பின்றி நின்றுஅனாதி யே தொடர்ந்துவரும் பிறவிப் பிணியினை அறுத்தற்கு ஓர்மருந்தாந் தன்மையினையுடையன் அக்கடவுள். அதற் கு ஓர் ஐயமில்லை. அதனையெஞ்ஞான்றும் இடைவிடா து அன்புடன் நினைப்பீராக என்றவாறு.

இதனால் பதியினை வழிபடவேண்டுமென்ப தும் உறுதிப்பாடுங் கூறப்பட்டன. (க0)

பதிமுதுநிலைமுற்றிற்று.

## உயிரவைநிலை.

அஃதாவது, பலவாய வுயிர்களது முறைமை. இதனைப் பன்மைவாசகப்படுத்திய வதனால் பதியொ இன்றே யென்பது தானே கொண்டுகிடந்தது. பதியி னியல்புகூறிப் பசுக்களியல்பு கூறிற்றாகலான், மேலை யதிகாரத்தினோடு இதற்கியைபுடைத்து எனக்கொள்க. பசு - உயிர் - சேதனன் - புற்கலன் - சீவன் - அணு - வியாபகன் - ஆன்மா - என்பது ஒரு பொருட்கிளவி.

கக. பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந், துறந்தோர் துறப்போர் தொகை.

(எ-து.) உயிர்கள்தோற்றிய காலத்தினது தொகையும், மேற்றோற்றுங் காலத்தினது தொகையும், இறைவன்திருவடியை அடைந்தாரது தொகையும், மேல்அடைதற்குரியாரது தொகையும், தம்மிலொக்கும் என்றவாறு.—அளவிலவென்பதாம்.

ஈற்றினின்ற தொகை நான்கினோடுங் கூட்டப்பட்டது. உயிருண்மை யுடைத்தெனக்கூறியது எதனாலெனின் பொருளுண்மைபெற்றே அதனியல்பு கூறவேண்டும்; பித்திகை யுடைத்தாயே சித்திரமெழுதவேண்டுமாறுபோல.

இதனு லுயிர்களது உண்மையும், மிகுதியும், கூறப்பட்டன.

(எ-து.) தன்தாளினை யடைந்தார்மாட்டு நன்மையி னைச்செய்தலும், அதுசெய்யார்மாட்டு அதுசெய்யா திருத்தலும், உடையனுயினும் வயிரமென்பது சிறிதுமில ன்; இன்பத்தினைப் பண்ணுஞ்சங்கரனென்னும் பெயரி னையுடையான்ஆகலான் என்றவாறு.

வடமொழியில் சம் என்பது சுகம், கரன் என்பது பண்ணுவான். இவையிரண்டும் புணர்ந்து சங்கரனென நின்றது.

இதனுல், விருப்பு வெறுப்பிலனென்பதும், அவரவர் செய்திக்கொத்த பயனுதவும் நடு வுநிலைமையை யுடையவனென்பதும்,கூறப் பட்டன. (கூ)

க0. உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து.

(எ-து.) ஞானமயமாய்ப் பிரிப்பின்றி நின்றுஅனுதி யே தொடர்ந்துவரும் பிறவிப் பிணியினை அறுத்தற்கு ஓர்மருந்தாந் தன்மையினையுடையன் அக்கடவுள். அதற் கு ஓர் ஐயமில்லை. அதனையெஞ்ஞான்றும் இடைவிடா து அன்புடன் நினைப்பீராக என்றவாறு.

இதனுல் பதியினை வழிபடவேண்டுமென்ப தும் உறுதிப்பாடுங் கூறப்பட்டன. (க0)

பதிமுதுநிலைமுற்றிற்று.

இரண்டாவது

## உயிரவை நிலை.

அஃதாவது, பலவாய வுயிர்களது முறைமை. இதனைப் பன்மைவாசகப்படுத்திய வதனால் பதியொன்றே யென்பது தானே கொண்டுகிடந்தது. பதியினியல்புகூறிப் பசுக்களியல்பு கூறிற்றுகலான், மேலையதிகாரத்தினோடு இதற்கியைபுடைத்து எனக்கொள்க. பசு - உயிர் - சேதனன் - புற்கலன் - சீவன் - அணு - வியாபகன் - ஆன்மா - என்பது ஒரு பொருட்கிளவி.

கக. பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந், துறந்தோர் துறப்போர் தொகை.

(எ-து.) உயிர்கள்தோற்றிய காலத்தினது தொகையும், மேற்றோற்றுங் காலத்தினது தொகையும், இறைவன்திருவடியை அடைந்தாரது தொகையும், மேல்அடைதற்குரியாரது தொகையும், தம்மிலொக்கும் என்றவாறு.—அளவிலவென்பதாம்.

ஈற்றினின்ற தொகை நான்கினோடுங் கூட்டப்பட்டது. உயிருண்மை யுடைத்தெனக்கூறியது எதனாலென்னில் பொருளுண்மைபெற்றே அதனியல்பு கூறவேண்டும்; பித்திகை யுடைத்தாயே சித்திரமெழுதவேண்டுமாறுபோல.

இதனா லுயிர்களது உண்மையும், மிகுதியும், கூறப்பட்டன. (க)

கஉ. திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்கள
ன்றி, யொருமலத்தா ராயுமுளர்.

(எ-து.) ஆணவம் மாயை கன்மம் என்று மலங்கள் மூன்றுடையராகியும், இம் மூன்றில் மாயை நீங்கி யேனைய இரண்டு முடையராகியும், அவ்விருவகையு மல்லாது ஆணவமொன்றினையு முடையராகியும், சொல்லப்பட்ட மூன்றுதிறத்தினையுடையார் அவ்வான் மாக்க ளென்றவாறு.

ஆயுமென்பது மூன்றிடத்துங் கூட்டப்பட்டது. அவரவர் நிரனிறையிற் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலராம். "உரைதருமிப் பசுவர்க்க முணரின்மூன்று முயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர், நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயையிற்கும்" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனால் தொடர்பின் விகற்பத்தால் உயிர்கள் மூவகைப்பட்டமை கூறப்பட்டது. (உ)

கரு. மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்
ளார்க, டோன்றலர் தோற்றுள்ளார் துணை.

(எ-து.) இம்மூன்று திறத் தான்மாக்களும், மூலமாகிய ஆணவத்தாற் பிணிக்கப்பட்டவர்களே. அவருள், மாயை யென்னுந் துணையினையுடைய சகலர், தாங்க

ன்றடுத்தவொன்னும் தன்மை தமக்குத் தெரிதலிலரெ ன்றவாறு.—ஏனையரிருவருக்குந் தெரியுமென்பதாம்.

மலமென்பது அழுக்கு. உம்மை - முற்றும்மை. முன்னரோ ரொன்ருக நீக்கப்பட்டது மா யையும் கன்மமும் அல்லது ஆணவமன்றெ ன்பது, இதனுற் கூறப்பட்டது. (ங)

கச. கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடு
ந், திண்டிறலுக் கென்னேசெயல்.

(எ-து.) பலகாலுஞ் சகலாவத்தையில் தாம் கண்டறிந்த பொருள்களைச் சொற்பன அவத்தையில் திரிபு படக்காணுந் திணிந்தவெற்றியினையுடைய வுயிர்களுக்குச் செயலுடைத்தென்பது எவ்வண்ணமோ என்றவாறு.

திண்டிறலென்பது அன்மொழித்தொகையாய் - இகழ்ச்சிக்குறிப்பு மொழியாய்நின்றது. திரிபுபடக்காண்டலாவது - நல்குரவாளர் தமைச்செல்வராகவும், செல்வர் தமைநல்கூர்ந்தவராகவும், உறுப்பில்லார் தமையுறுப்புடையராகவும், உறுப்புள்ளார் தமையுறுப்பில்லாராகவும்; ஒன்று ஒன்ருக மாறுபாடாகக்காண்டல் முதலாயினவெல்லாம். (ச)

கரு. பொறியின்றி யொன்றும் புணராத புந்தி
க்கறிவென்ற பேர்நன் றற.

(உ-து.) செவிமுதலிய கருவிகள் கூடாமல் யாதொரு விடயமும் எய்தமாட்டாத வுணர்வினையுடைய வுயிர்களுக்கு நூல்வல்லோர் அறிவுடையன வென்றிட்டபேர் மிகவும் அழகிதென்றவாறு.

பொறியின்றியொன்றும் புணராதென்பதனால், அது கூடிப்புணரும் மென்பதாயிற்று. புந்தி ஆகுபெயர். நன்றென்பது, முன்னையது போலிகழ்ச்சிக் குறிப்பு மொழி.

இவை யிரண்டுபாட்டானும் உயிர்கட்கோர் முன்னிலையான் அன்றி அறிவுந் தொழிலுங் கூடாமை கூறப்பட்டது. (௫)

கசு. ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய.

(எ-து.)விளக்கஞ்செய்யும் ஞாயிறு திங்கள் அங்கியென்னுஞ்சுடர்களும், மயக்கினைச்செய்யும் அந்தகாரமும், பலவகைப்பொருளோடு சிறந்தவுலகமும், விழித்திராநின்ற கண்ணினிடத்துச் சோதியில்லையாயின் என்ன பயனைச்செய்தற் பொருட்டு? என்றவாறு.—யாது மின்றென்பதாம்.

இவ்வுவமையால் நித்தப்பிரகாசமாகிய சிவனுடைய ஞானமும், இருளாகிய ஆணவமும், கலைமுதல் நில

னீருகிய தத்துவங்களும், நித்தமாகிய வுயிர்களிடத்து உணர்வில்லையாயின் என்னபயனைச் செய்யுமென்னும் பொருள்தோன்றிநின்றது. இஃது ஒட்டென்பதோ ரலங்காரம். இம்மூன்றுவகையினும் நன்று தீதுகளை யடைவன வுயிர்களேயா மென்பதாயிற்று.

இதனால்விளக்க விளங்கு கண்போல வுணர்த்தவுணரு முணர்வினையுடைய தென்பதுங் கூறப்பட்டது. (சு)

கஎ. சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை, யுற்றசத சத்தா முயிர்.

(எ-து.) நிலைபெற்ற ஞானமாகிய சிவனுக்கு அனித்தங்களான சடப்பொருள்களைப் புதிதாகச் சுட்டியறியவேண்டுவதில்லை. அசேதனங்களாகிய தத்துவங்கட்கறிவென்பதில்லை. இவ்விரண்டு தன்மையாயின், அவ்விடத்திவற்றைத் தன்னுணர்வு செலுத்திப் பகுத்தறியுமுயிர்கள் சத்தும் அசத்துமன்றியே சதசத்தாதல்வேண்டுமென்றவாறு.—அல்லது கூடாதென்பது கருத்து.

உயிர்களுஞ்சித்தென்று வழங்கப்படுமாயினும் சிவனுடைய ஞானத்தினோடொருதன்மை யல்லவென்பதாம்.

"சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்- சிவனருட்சித் திவனருளைச்சேருஞ் சித்தவன்று

ன் - பவங்கெடுபுத்திமுத்தி பண்ணும்" என்றருளிச் செய்தவாறுங்காண்க.

இதனு லுயிர்கள் சுத்தவறிவுஞ் சடமு மல்லவாதல் கூறப்பட்டது. (எ)

கஅ. இருளினிருளாகி யெல்லிடத்தி னெல்லாம், பொருள்க ளிலதோ புவி.

(எ-து.) இருள்வந் திறுத்தகாலை மறைந்தும் - ஒளிவந் திறுத்தகாலை விளங்கியும் நிற்கும் பொருள்களை யுடையதன்றோ வுலகமென்றவாறு.

பொருள்களென்ற பன்மையால் அவை கண்ணும் ஆடியும் விண்ணுமுதலாயின. ஓகாரம் எதிர்மறை இதுவும் ஓட்டென்பதோ ரலங்காரம்.

இதனுல் உணர்வுஞ் சடமுமன்றி யிடைப்பட்ட தொன்றில்லை யென்பாரை யுண்டெனமறுத்து மேலது வலியுறுத்தப்பட்டது. (அ)

கக. ஊமன்கண் போல வொளியு மிகவிருளே யாமன்கண் காணு தவை.

(எ-து.) உதயஞ்செய்து விளங்காநின்ற சூரியனைக் காணுத கூகையினது கண்போல முற்கூறிய வுயிர்களும், கருத்தாவாகிய சிவனுடைய ஞானத்தினைக் காண

மாட்டா. அந்த ஞானமும் அந்தக் கூகையினது கண்ணுக்குச் சூரியன் சிறிதுந்தோன்றாது நின்றாற்போலவுயிர்களுக்குந் தோன்றாது நின்றதாமென்றவாறு.

உம்மை-சிறப்பும்மை. ஏகாரம்-தேற்றம்.

இதனாலுயிர்கள், தமக்கு உயிராகி விளங்கி நின்ற ஞானத்தினைக் காணாமைக்கு, உவமானமெடுத்துக் கூறப்பட்டது. (க)

உ0. அன்றளவு மாற்றாமுயி ரந்தோ வருடெரிவ, தென்றளவொன் றில்லா விடர்.

(எ-து.) அனாதியேதொடங்கி யிற்றைவரையும் எண்ணிறந்த துன்பத்தினைத் தாங்கிநிற்கு முயிர்கள் அந்தோ! எந்தநாளோ திருவருளாகிய ஞானத்தினைக்கண்டு தம்மிடும்பைதீர்ந்து பேரின்பத்தையெய்து நாளென்றவாறு.

அந்தோவென்ப திரக்கத்தின்கட்குறிப்பு.

இதனா லுயிர்படுந் துன்பமிகுதிக் கிரங்கிக் கூறப்பட்டது. (உ0)

உயிரவைநிலே முற்றிற்று.

---

மூன்றுவது.

## இருண்மல நிலை.

அஃதாவது, அறியாமையே வடிவாகிய ஆணவமல த்தினது தன்மை. உயிரவைநிலை யென்பது போலப் பொதுப்படப் பாசங்களது நிலையென்னுது இருண் மலநிலை யென்றதனுல், ஒழிந்த மாயை கன்மங்களெ வ்வாறடங்குமோ வெனின், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே" என்பதனுலடங்கும். முற்கி ளந்த வுயிர்களாற் புணரப்பட்ட பாசத்தினியல்பு கூறுதலின், மேலை யதிகாரத்தினே டிதற் கியைபுடை த்தெனக்கொள்க.

உக. துன்றும்பவத்துயரு மின்புந் துணைப்பொ
ருளு, மின்றென்ப தெவ்வாறு மில்.

(எ-து.) தொன்று தொட்டிடைவிடாது வரும் பிற வித்துன்பமும், மேலாய வீட்டின்பமும், இவற்றைக் கூட்டி முடிப்பதாய முதல் துணை நிமித்தங்களும், இ ல்லையென் றறுதியிட்டுக் கூறுதல் காண்டல் முதலிய அளவைக ளெல்லாவற்றுனும் இல்லையென்றவாறு.(க)

உஉ. இருளான தன்றியில தெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

(எ-து.) உலகத்து வெவ்வேறு பலவகைப்பட்ட கு ணங்களையுடைய பொருள்களெல்லாவற்றினையும் ஒரு

பொருளாக வேற்றுமை தோன்றாது மறைத்துக்கொண்டு நிற்பது இருளுருவானதற்கன்றிப் பிறிதொரு பொருட்கில்லை யென்றவாறு.

ஆதலா லிதுபோலப் பிறப்பிறப்புகளும், வீட்டுநெறியும், காரணங்களும், பகுத்தறியாதபடி மறைத்தது ஆணவமென்பதாயிற்று.

இவை யிரண்டுபாட்டானும் ஆணவத்தினது உண்மையும், அஃதிருள்போல மருள்விளைவிற்றென்பதும், கூறப்பட்டன. (உ)

உ௩. ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு, மிருபொருளுங் காட்டா திது.

(எ-து.) அந்தகாரமானது வேறொரு பொருளையுங் காணுமல் மறைத்துத் தன்னுருவங் காட்டிநிற்கும், ஆணவமானது தன்னுருவத்தையும் ஞானத்தையுங் காட்டாமல் நிற்கும் என்றவாறு.

இதனு லிவ்விருளினு மிகக்கொடியது ஆணவமென்று கூறப்பட்டது. (௩)

உ௪. அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி, யின்றளவு நின்ற திருள்.

(எ-து.) அகவிளக்காகிய ஞானத்தினேடே தானும் அனுதியே கலந்துகொண்டு அந்த ஞானத்தின்மேற் ப

டராது உயிரளவிலே யமைவுற்று இது நாள்வரையும் நீங்காது நின்றது ஆணவமாகிய அந்தகார மென்ற வாறு.

உள்ளொளியோடு என்பது உயர்பின்கண்வந்தது, "ஒருவினை யொடுசொ லுயர்பின் வழித்தே" யென்ப திலக்கண மாதலின்.

இதனால் ஆணவமாகிய அந்தகாரம் அநாதி யென்பதும், மாயை கருமம்போல நீங்கிப் புணர்ந்த தன்றென்பதும், கூறப்பட்டன. (ச)

உரு. பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண்
டென்றுங், கணவர்க்குந் தோன்றாத கற்பு

(எ–து.) எண்ணிலராகிய ஆன்மாக்களைப் பேதமறக் கலந்துஇடையறாது நின்றாலும், இருள்மலமாகிய மக ளுக்கொருநாளுந் தன்று தலைவராகிய ஆன்மாக்களுக் கும் தன்னைக்காட்டாது நிற்பதோர் நியமமுண்டென் றவாறு.

பாவையெனவுங் கணவரெனவுங் கூட்டம்பற்றி யுரு வகஞ்செய்ததன்றி ஆண்குறி பெண்குறி யவ்விடத் தில்லையெனக்கொள்க. என்றும் என்றதனால்கேவல, சகல, சுத்த, மூன்றினுருபெற்றும். சிறப்பும்மை யிர ண்டனுள், பின்னரது இழிபுகுறித்து நின்றது. இடை நின்ற உம்மை முற்றும்மை.

இதனு லாணவத்தினது தன்மை கூறப்பட்டது. (ரு)

உசு. பன்மொழிக ளென்னுணரும் பான்மை
தெரியாத, தன்மையிரு ளார் தந்தது.

(எ-து.) பற்பலவார்த்தைகளாற் பயனென்னே ? அறியவேண்டும் பொருள்களை யறியும் பகுதிதோன்றாது நின்றவியல்பெல்லாங் கருமை நிறத்தினையுடைய மூலமலமாயினார் கொடுத்த தென்றவாறு.

அறியவேண்டும் பொருள்களாவன பதி பசு பாசமென மூவகைப்பொருள்களும், சரியை கிரியை யோக ஞானங்களென்ற நால்வகை யொழுக்கமுமாம். இருளாரென்பது செறலின்கண்வந்த அஃறிணை வழுவமைதி.

இதனுல் மூலமலத்தினுல்வந்த வறியாமை வலியுறுத்தப்பட்டது. (சு)

உஎ. இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற்
போக்கும், பொருளுண்டே லொன்றாக
ப் போம்.

(எ-து.) இருளாகிய அவிச்சையில்லையாயின், இந்திரியங்கட்கு ஏவல்செய்யும் பிறவித் துன்பம்படற்குக் காரணமென்னை ? அஃது ஆன்மாவினது சுபாவமாயி

ன் நீங்காது, நீக்குஞ் சிவஞான முண்டாயின் அதனுடனே உயிருங்கெட்டுப்போமாதலா லென்றவாறு. பிறவித்துன்பத்துக்கு நிமித்தம் அவிச்சையென்பதாயிற்று.

இதனால் அவிச்சையில்லை யென்பாரை யுண்டென்றுமறுத்துக் கூறப்பட்டது. (எ)

உஅ. ஆசாதி பேலணைவ காரணமேன் முத்தி
நிலே, பேசா தகவும் பிணி.

(எ-து.) அவிச்சை யிடையிட்டு வந்ததாயின், அஃதோர் காரணமில்லாமல் வந்துபொருந்திய தென்னை! அன்றி முத்தியினு முரையாடாதுவந்து கவர்ந்து கொள்ளுமன்றோ வென்றவாறு.

உரையாடாது கவர்தல், தோன்றாது வினைவிற் கவர்தல்.

இதனால் அவிச்சையாதி யென்பாரை மறுத்துக் கூறப்பட்டது. (அ)

உகூ. ஒன்று மிகினு மொளிகவரா தேனுள்ள
மென்று மகலா திருள்.

(எ-து.) மலமாயையென்னு மிரண்டினுள் மலமாகிய இருள்வியாபகம் எல்லா மறைத்ததாயினும் ஏகதேச விளக்கமாகிய மாயாகாரியத்தினையுயிர்கள் கவர்ந்து கொள்ளாதாயின் எந்த ஞான்றும் அவ்வவிச்சை யவைகளைவிட்டு நீங்குவதில்லை யென்றவாறு.

கவருந்தன்மையுயிர்களுக்குண்டாகவேண்டுமென்
பதுகருத்து.

என்றுமென்பதருளுதய மானகாலத்தினுமென்
பதுகாட்டிநின்றது.

இதனாலுயிர்கள் அவிச்சை நீங்கிமுத்திய
டைவதற்கோர்நிமித்தங்கூறப்பட்டது. (௬)

௧௦. விடிவாமளவும்விளக்கனையமாயை, வடி
வாதிகன்மத்துவந்து.

(எ-து.) சிவனுடையஞானமாகிய கிரணந்தோன்றி
ஆணவவிருள்நீங்குமளவு மாயையினிடத்திலே நின்
றுந்தனுகரணபுவனபோகங்கள்தத்தம் புண்ணியபா
வங்களுக்கிடாகத்தோன்றிச்சிறிதேமலவிருளினை நீ
க்கிவிடையவின்பங்களைக்காட்டும் விளக்குகள்போ
லவாமென்றவாறு.

மலமுமாயையும் இருளுமொளியும்போலத் தம்மு
ள்மாறுடையவென்பதாயிற்று.

சிறிதேநீக்குதல்'விளக்கனைய'என்பதனாற்,பெற்று
ம்,விடிவாமளவுமென்றதனால்மாயாகாரியங்கள்சங்
காரகாலத்திற் றமதுகாரணத்திலேயடங்கினும் உயி
ர்களைவிட்டுநீங்கினவன்றென்பதாம்"இருளிருள்நீசு
டரிரண்டாநின்ற முழுமலமாயை,, என் றருளிச்
செய்தவாறுகாண்க.

இதனால் அவ்வவிச்சையால் நீங்காதுதொடர்ந்துநின்றமாயை, கருமம், இரண்டின் முறைமையுங்கூறப்பட்டது. (சo)

இருண்மலநிலை முற்றிற்று.

நான்காவது

## அருளது நிலை.

அஃதாவது-கருணையுருவாகியஞானத்தின்முறைமை

இத்தன்மையவாகிய அவிச்சையைத்துறந்து வீட்டுநெறிகாட்டுதற் பொருட்டு அதற்குமாறாகிய அருளினது முறைமைகூறலின், மேலை அதிகாரத்தினோடு இயைபுடைத்தெனக்கொள்க.

௩௧. அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல்

(எ - து.) ஒருவர்க்கெல்லாப் பொருள்களுள்ளுந் தாம்விரும்பிய பொருளின் மேலாய பொருளில்லாதவாறுபோலத் திருவருளின் மிக்கதாகியபொருள் உலகத்தில்லை யென்றவாறு.

இதனு லருளினது உயர்புகூறப்பட்டது. (க)

௩௨. பெருக்க நுகர்வினை பேரொளியாயெங்கு,
மருக்கனெனெ நிற்கு மருள்.

(எ-து.) உலகத்து மக்கட்டொகுதிகள் பொருளி

வ்வவற்றின்வடிவாற் செய்ததிவகம்போல, மிக்க தெய்வ வடிவங்கண்டு அஞ்சிவெருளாது மனிதனை த்தன்வயத்தாக்கிக் கோடற்பொருட்டு, அருள்போ ர்த்துக்கொண்டமானிடவுருவாகியகுருவடிவினைப் போர்வையாக அறியமாட்டாவாம் இவ்வுலக மெ ன்றவாறு.

இவைமூன்றுபாட்டானும் அகளமாய் நி றைந்தஅருளேகுருவுருவுதரித்துவந்ததெ ன்பதனை அறியாதார்இழிபு கூறப்பட்டது.'(ரு)

சுசா. எமக்கெ னெவனுக் கெவைதெரியுமவ் வ, தமக்கவனை வேண்டத்தவிர்.

(எ-து.) நீகுருவுண்மை கொண்டமையால் எம க்குவரும்பயனென்னை! யாவனொருவனுக்குயாவை வ சில நூற்பொருள்கள் குரவனையின்றியுணர முன் னேடு பின்மலைவறத்தோன்றும் அந்நூற்பொருள்க ள் அவனைத்தமக்குக்குரவனுகஅவாவிநிற்கும் பொ ழுது இம்மறுதலையினை ஒழிவாயாக என்றவாறு.

குருவுண்மை கொள்ளாயாயின் என்ப தெஞ்சி நின்றது.

இதனுல் யாதொருநூற்பொருள்களுங்கு ரவனையின்றி யுணரப்படாவென்றுகூற ப்பட்டது. (சு)

௬௭. விடநகுலை மேவினுமெய்ப் பாவகனி
ன்மீளுங், கடனிலிருள்போவதின்கண்.

(எ-து.) விடமானது கீரிதானேவந்து தீண்டினு மீளாது அதன்வடிவினைப் பாவிப்பானொருவனால்மீளுமாறுபோலவே, இவனுடையதிருநோக்கினால் ஆணவவிருள் நீங்குமுனக்கு என்றவாறு.

இறைவன் அனுதியே உயிரோடு கலந்து நிற்பினும் குருவுருக்கொடு வந்தல்லது பாசம் நீங்காதென்பதாயிற்று.

இது சகலனைக் குறித்துநின்றது.
இதனால் ஆசிரியனால்பாசம் நீங்கவேண்டுமென்பதுகூறப்பட்டது. (எ)

௬௮. அகலத் தருமருளையாக்கும் வினைநீக்குஞ், சகலர்க்கும் வந்தருளுந்தான்.

(எ-து.) கலையினின்றும்நீங்கின விஞ்ஞானகலர்க்கும்-பிரளயாகலர்க்கும்- நிராதாரமாய்நின்று அருளைவிளக்கும் கன்மமலச் சேதனம் பண்ணுதற்குப் பக்குவராகிய சகலர்க்கும்-குருவுருவினையாதாரமாகக்கொண்டவர்போலத்தானேவந்தனுக்கிரகம்பண்ணுமென்றவாறு.

அவ்வாறருள் புரிதல் சகலர்க்குங்கூடாதென்பதாம்.

றுதலின், மேலையதிகாரத்தினோடு இதற்கியையபுடைத் தெனக்கொள்க.

௩௧. அறியாமையுண்ணின் றளித்ததே காணு
ங், குறியாக நீங்காதகோ.

(எ-து.) தோன்றாத்துணையாய்க்கலந்து நின்றுகாத்து நடத்தினஅருளே, கண்ணாற்காணப்படும்வடிவினையுடையதாக விட்டுநீங்காத குரிசிலென்றவாறு,

இதனால் அருள்குருவடிவு உவந்தமைகூறப்பட்டது. (௧)

௩௨. அகத்துறு நோய்க்குள்ளினரன்றியதனை
ச், சகத்தவருங் காண்பரோதான்.

(எ-து.)ஓர்இல்லின்கண் ஒருவர்கொண்டபிணியை அவ்வில்லின்கண் வாழ்வார் அறிவதன்றி அதனைச் சேய்மைக் கண்ணராகிய உலகத்தார் அறியவல்லரோதா னென்றவாறு. தான்என்பதசைநிலை; ஓகாரம் எதிர்மறை.

இதனால் இங்ஙனம் வடிவுகோடற்கு அருளாதல் வேண்டுமோவென்னும் ஐயத்தினை யகற்றி வலியுறுத்தப்பட்டது. (௨)

௩௩ அருளாவகையாலருள்புரியவந்த, பொ
ருளாவறியாபுவி.

(எ-து.) படைப்பு நிலை ஈறு மறைப்பு என்னும்

நான்கினையுந்தோன்றாது செய்தவாறுபோல, அருளென்னுந்தொழிலினையுந் தான்பண்ணாததுபோலப் பண்ணும்படிமானிடவடிவென்னும் அங்கியால்மறைத்துக்கொடுவந்தஉண்மைப்பொருளேஇக்குருவடிவென்பதனைஅறியமாட்டாது உலகமென்றவாறு.

தம்போலொருமானிடமாக நினைக்குமென்பதாம். (௩)

௪௪. பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார்
போதமா, மெய்யிரண்டுங்காணார்மிக.

(எ-து.) நிலையாத காயவாழ்க்கையினையும்-ஆணவமலத்தால் மறைந்தவுணர்வினையும் - உடையராய், ஞானமென்னுஞ் செல்வத்தினையும் எய்துதலில்லாதார், அறிவுமயமாகிய அருளும்-அவ்வருளான் ஆகிய தேசிகவடிவும் - என்னுமுண்மைப் பொருளிரண்டினையும் சிறிதுமறியமாட்டாரென்றவாறு.

இத்தன்மையவாகிய ஆசிரியவடிவினைஅரு கொண்ட வடிவமாகவுணராராகவே, நின்மலமாய்அகண்டமாய்ச் சின்மயமாய் ஒழிவறநிறைந்த அவ்வருளினையும் உணரமாட்டாரென்பதுகருத்து- (௪)

௪௫. பார்வையெனமாக்களைமுன்பற்றிப்பிடித்தற்காம், போர்வையெனக்காணுபுவி.

(எ-து.) விலங்குகள்பறவைகளைப் பிடித்தற்கு அ

ளையிட்டவும்துய்க்கவும்நிமித்தமாய்நின்றசூரியனை
ப்போல, அருளும் உயிர்களெல்லாம்புண்ணியபாவ
ங்களைவளர்க்கவும் அவற்றின்பயனாகியசுகதுக்கங்க
ளையருந்தவும்காரணமாயிருந்தவொளியாகியெவ்
விடத்தும் நிறைந்துநிற்கு மென்றவாறு.

'அருக்கனென, என்றதனால், அவ்வாறுகாரணமா
தல் ஒருவராற்செய்துகொள்ளப்பட்ட தல்லவாம்.
பொதுப்பட வினையென்றதனால் புண்ணியபாவ மி
ரண்டுமாம். சூரியனைப்போல வோரிடத்துண்டா
யகாலை யோரிடத் தின்றாயிருப்ப தில்லையென்பதற்
கு, எங்குமென்றருளிச்செய்தார்.

இதனால் அருள் காரண மாதல் கூறப்ப
ட்டது. (உ)

௩௩. ஊனறியாதென்று முயிரறியாதொன்று
மிது, தானறியா தாரறிவார்தான்.

(எ-து.) அசேதனங்களாகிய தத்துவங்கட்கு
எஞ்ஞான்றும் அறிவுண்டாவதில்லை. உயிர்கள் யா
தொன்றுந் தாங்களாய் அறிய மாட்டா வாதலா
ல், அந்த அருள் தாமறியாமல் உலகத்தின்கண்
அறிவினைப் பெறுவார் யாவரென்றவாறு.

அருள் அறிந்தறிவித்தேயறியவேண்டுமென்பதாம்.

இதனாலருளிற்கு அறியவேண்டு வதில்லை

யென்பானை, உயிர்சுட்சறிவித்தற்பொரு
ட்டுவேண்டுமெனமறுத்துக்கூறப்பட்டது.(௩)

௩௪. பாலாழி மீனுளும் பான்மைத் தருளுயி
ர்கண், மாலாழியாழுமறித்து.

(எ-று.) மேலாய வருளின்கட்பட்ட வுயிர்கள்அ
தனோடு பொருந்திநின்றுபேரின்பத்தை நுகராமல்
மாயாபோகமாகிய மயக்கவேலையு ளாழ்ந்து அழுந்
துந்தன்மை, திருப்பாற் கடலின் கண்வவகிய மீன்
கள்பாலைப்பருகாது அதனுள் சிறிதாய பிராணி க
ளை வருந்தித் தேடியுண்ணு முறைமையினை யுடைத்
தென்றவாறு.

மீன்களும் பாலைப்பருகுமாயின் செந்துக்களைத்
தேடி யொருகால் கிடைத்துங் கிடையாதும் உழ
லாமல் நின்றநிலையிலே வேண்டுமளவும் பருகும்.உ
யிர்களும்அருளினோடுகலந்துநிற்குமாயின், சிற்றின்
பங்களைத்தேடி அவ்வாறுழலாமல் பேரின்பத்தினை
த்தாமும்அந்நிலையிலேயிடையறாது அனுபவிக்குமெ
ன்பதாம்.

இதனு லருளோடு கூடிநின்றும் உயிர்க்கி
ன்புறும் இழிபுகூறப்பட்டது. (௪)

௩௫. அணுகுதுணையறியாவாற்றேனிலைந்தி
னுணர்வை யுணராதுயிர்.

(எ-து.) தனக்கு மருங்காகவுடன்வரும் துணையி னைத்துணையெனஙடவாதுவழிச் செல்வான்போலவு ம், தமக்கு முதலாய்நின்று உணர்த்துந் தன்மையறி யாத இந்திரியங்கள் போலவும், உயிர்கள்தாமுந்த மக்குயிராய் நின்று உணர்த்தும் அருளினை அறிய மாட்டாவென்றவாறு.

இவைதுணைமையுந் தலைமையும்பற்றிவந்த எடுத் துக்காட்டுவமை. (ரு)

ருசு. தரையையறியாதுதாமேதிரிவோர்
புரையையுணராபுவி.

(எ-து.) பூமியைத் தமக்கு ஆதாரமென்றறியச் செய்யாது, தாமேதமக்காதாரமாகப் போக்குவரவு செய்வாரைப்போல் அருளினைத்தமக்கு ஆதார மென்று அறியா உயிர்களும் என்றவாறு.

புவியென்ப திண்டுயிர்கண்மே னின்றது. (சு)

ருஎ. மலைகெடுத்தோர்மண்கெடுத்தோர் வா
ன்கெடுத்தோர்ஞானந், தலைகெடுத்தோ
ர்தற்கேடர் தாம்.

(எ - து.) மலையினையிழந்தோரும், மண்ணி னையிழந்தோரும், ஆகாயத் தினையிழந்தோரும், எ ங்கணுநிறைந்த பேரறிவினை யிழந்தோரும், தா னெ

ன் பதனையிழந்தோரும், தம்மிற்றுமொப்ப ரொன்ற வாறு.

மலை நிலம் ஆகாயம்தான்என்பனவற்றைக்கெடுத் தோர் உலகின்கணில்லை. உள்ளாராயின் அவர்போல அருளினையிழந்தோரும்பேதையரொன்பதாம்.

ஈண்டுத்தற்கேடென்பதுயாக்கைமேல்நின்றது()

௩அ. வெள்ளத்துணுவற்றி யெங்கும்விடிந்தி
ருளாங், கள்ளத் தலைவர் கடன்.

(எ - து.) நிறைந்தநறுநீரின்கண்ணே நின்று ம் அதனைப் பருகாது நாவறண்டும், எவ்விடத்து ம் இருள்நீங்கி விடிந்திருக்க மயங்கியுநிற்கு மட வோரதுதன்மையே, தாம்நிறைந்த அருளோடு கல ந்துநின்றும் அதனால் வரும்பேரின்பத்தை நுகரா த வஞ்சத்தலைமையுடைய ஆன்மாக்களதுமுறைமை யென்றவாறு.

உயிர்கண்மாட்டுளதாயகுறையேயன்றி அருளின் குறையன்றென்பதாம்.

வஞ்சத்தலைமையாவது, தாமொன்றிற்குங் கரு த்தாவல்லவாயிருக்கவும் யானெனதென் றகங்கரி த்தல். (அ)

௩௯. பரப்பமைந்து கேண்மினிது பாற்கலை
ன்மேற்புரை, காப்பருந்தநாடுங்கடன்.

(எ-து) சஞ்சலமனத்தாற்படும்வினைவிளையடக்கி அருளின்றன்மையே யினிதாகக்கேட்டு மனங்கொள்வீராக. அதனைநாடாது சிற்றின்பங்கள்மேற் படரும் இப்புல்லறிவாண்மை, உறியின்மேல்வைக்கும்இனியபாற்குடத்தின்மீதிருக்கும்பூனையானது சுவர்த்தலையிலோடுங்கரப்பினைத்தாவிப்பற்றிநுகரவிசாரிக்குமுறைமையினையொக்குமாகலானென்றவாறு.

பூனையும் உறியின்கட் பாற்குடத்தின் மேலிருந்தவாறே அதனைப்பருகாது, கரப்பினைப்பற்ற விசைகொண்டுவாவுங்கால் அதனைப்பற்றின் சிறிதினிமையில்லாத வுணவாதலேயன்றித் தாவலான்மிக்கவருத்தமுமெய்தும், கைப்படாக்கால், வருத்தத்தோடுகரப்பினையும்போக்கிப்பாற்குடத்தினையுமுடைத்து மிக்கதுன்பமெய்தும். உயிர்களும்அருளேகூடிநின்ற அருளகத்தடங்கியபேரின் பத்தினையெய்தாது சிற்றின் பங்கண் மேற் படரு மாயின் அதுபோலவொருகா லெய்துஞ் சிற்றின்பத்துக்கு மனமொழிமெய்களாற் றுன்பமுற்றும், அஃதெய்தாக்கால் இருமையின்பமுமிழந்தும் மிக்க இடர்ப்படுமென்பதாம்.

உறியின்மேல்வைக்கும் பாற்குடமெனவும், சுவர்த் தலையிலோடுங் கரப்பெனவும், விதித்த தனுபவம்.

இவையைந்து பாட்டானும் அருள், துணையும் இறைமையுமாகியும், ஆதாரமாகியும் நிற்றலையறியாதிருத்தலும், எவ்விடத்தும் இருப்பதனைக் காணாமையங்கலும், அதனால்வருமின்பமெய்தாமையும், அதன்மேற்பற்றுச்செய்யாமையுமான உயிரின்குற்றங்கூறப்பட்டது. (௫)

௪0. இற்றை வரையியையந்துமேதும்பழக்கமிலா, வெற்றுயிர்க்குவீடு மிகை.

(எ-து.) அனாதியேதொடங்கி இன்றளவும் அருளோடிரண்டறக் கலந்துநின்றும், சிறிதும் அதிற்றோய்ந்த பழமை தோற்றுதலில்லாத வெறியவுயிர்கட்குவீடுசேர்தலென்பது மிகுதியென்றவாறுதசாதென்பதாம். வெறுமை, பயன்கொள்ளாமை; பழமை தோற்றுதல், உலகவெறுப்புத் தோன்றுதல்

இதனாலருளோடுகலந்துநின்றும்வீடுகூடநினையாதவுயிரின்பழிப்புக் கூறப்பட்டது.

அருளதுநிலை முற்றிற்று.

ஐந்தாவது

## அருளுருநிலை.

அஃதாவது ஞானவடிவாகிய குரவனதுதன்மை அருளதுநிலைகூறி அருளாணும் வடிவினது நிலைகூ

உடலகத்துயிர்போலக்கலந்துநின்று நடத்துமெ ன்பதாம். உடம்பென்ற பொதுவகையால் ஐவகை யுடம்புமடக்கும். அவையடங்கவே நிலமுதல் நாத மீருகியதத்துவமெல்லாமடங்குமெனக்கொள்க. ()

௫௫. தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற்ற
ன்மைதரும், பொன்னிறம்போன் மன்
னிறமிப்பு.

(எ-து.) அடுத்தபலவன்னங்களையுங் கவர்தலும் அவையடுத்திருக்கினுந் தன்னிறமேகாட்டி நிற்றலு மாய்ப்படிகத்தினதுத்தன்மையிரண்டிற்குந் தான்கா ரணமாகிநின்ற பண்ணும்சூரியன்கிரணம் போலா ம்இவ்வுலகிற்கு இறைவனதுசுடராகிய ஞானசத்தி யென்றவாறு,

கட்டுவீடென்னு மிரண்டிற்குர்தானென் றேகார ணமென்பதாம்.

இவை மூன்று பாட்டானும் இறைவனு லகினை நடத்து மாறு கூறப்பட்டது. (௫)

௫௬. கண்டொல்லை காணுநெறி கண்ணுயி
ர்நாப்பணிலை, யுண்டில்லையல்லதொளி.

(எ-து.) நினைவினையுடைய வுயிரினதுநடுவாக ஞானவொளிக்கு நிலையுண்டாதல் வேண்டுமென்று யின் வாயில்வழியாற் புலன்களை யுற்றுப்பார்த்து

விரைவிலுணரு முறைமையில்லை யாமென்றவாறு.

நடுவாகநிற்றல்கலந்துநிற்றல். இதனால்ஞானமு ன்னிற்பினல்லதுஅறிதல்கூடாதென்பதோரநுபவவ கையால் விளங்கக்கூறப் பட்டது.

இதுகுரவராலன்றியுணர்கொண்டுணர்தல ரிதெனக்கொள்க. (சு)

௫எ. புன்செயலினேடும் புலன்செயல்போ
னின்செயலை, மன்செயலதாக மதி.

(எ-து.) புருடனதுசிறுதொழின்வழியேதரிப்பின்றி நடக்குமிந்திரியங்களதுசெயல்போல்மாணவகனே நின்னுடையசெய்தியையும் இறைவனதுஇரிய சத் திவழியேயவ்வாறுநடப்பதாகக்கருதுவாயாக வெ ன்றவாறு.

அவ்வாறு கருதவேவினைத்தொடர்பின்றிப்பிறவி நீங்கிநிற்பனென்றதாம்.

இதனாலிறைவனதுசெயல்வழிநிற்றல் கூ றப்பட்டது. (எ)

௫அ. ஓராதே யொன்றையுமுற் றுன்னுதேநீ
முந்திப் ,பாராதேபார்த்ததனைப்பார்.

(எ-து.) ஞானமெவ்வண்ணமிருக்குமோவென்று ராயாமல் அதனையும் விடையங்கள்போலக் குறிக் கொண்டேன்றி நினையாமல் நீயாகமுன்சென்று மே

ற்கொண்டுகொண்டலுஞ்செய்யாம லுன்னைக் கண்ட ஞானத்தினைக்காண்பாயாகவென்றவாறு.

இவ்வாறசைவின்றி நிற்கவே அவ்வகண்டமாகியஞானந்தானேதோன்றுமென்பதுகருத்து. (௮)

௫௯. களியே மிகுபுல மாக்கருதிஞான
வெளியேயொளியாவெளி.

(எ-து.) இத்தன்மையவாகியஞானத்தினைக்காணப்பெற்றமையால் வருமகிழ்ச்சியையேபெரியவிடையமாகநினைந்துஞானமாகியவொளியன்றிவேறுனக்கோரொளியின்றாகும்படி அதனுட்புக்குக்கரந்து நிற்பாயாகவென்றவாறு.

கரந்துநிற்றல்விகற்பமறக்கூடிநிற்றல். (௯)

௬0. கண்டபடியேகண்டு காணாமைகாணுமற்
கொண்டபடியேகொண்டிரு.

(எ-து.) ஞானமானதுனக்குயாதொருபடியேவெளிப்பட்டது,அப்படியே நீயுங்கண்டறியாமையாகிய அதீதாவத்தைவந்துதோன்றாமல் யாதொருபடியுன்னைவிழுங்கிற்றப்படியேநீயும்விழுங்கக்கொடுத் திருப்பாயாகவென்றவாறு.

இம்மூன்றுபாட்டானுஞானத்தினைக்காணுமாறுங்கண்டாலதனுட்கலக்குமாறும் அ

வ்வழித்தன்னை அதன்வயத்தனுக்குமாறும் கூறப்பட்டன. மாணவகனேயென்பதும் மூன்றிற்குங் கூட்டி யுரைக்கப்பட்டது. (௧0)

அறியுநெறி முற்றிற்று.

ஏழாவது

## உயிர்விளக்கம்.

அஃதாவது-ஆன்மசுத்திபண்ணும்படி அறியுநெறியிற்கூறியவாற்றான் அறிந்தபடிநின்றுயானெனதென்னுஞ்செருக்கறுத்தல்கூறினமையின், மேலையதிகாரத்தினோடிதற்கியைபுடைத்தெனக்கொள்க.

௬௧. தூநிழலார் தற்காருஞ்சொல்லார்தொ
குமிதுபோற், றுனறுவாய் நிற்குந்தாம்.

(எ-து.) கோடையான்வெதும்பினோன்குளிர்ந்தநிழலையடைதற்கு அடைதியெனவொருவருஞ்சொல்லார், தானே விரைவினடையும் அத்தன்மையினையொக்கும் மாயாவிகாரவெம்மையான் வருந்தினோன் ஒருவன்தா னவ்வருளினை யடைந்ததுவாய் நிற்குமுறைமை யென்றவாறு.

உலகவெறுப்பின் அல்லது அருளினை யடைதல் கூடாதென்பதாம்.

இதனா லருளினை யடைதற்கு ஏது கூறப்பட்டது. (௧)

சஉ. தித்திக்கும் பால்காணுங்கைக்குந் திருந்திடுநாப், பித்தத்திற்றுன்றவிர்ந்தபின்.

(எ-து.) குற்றந்தீர்ந்தநாவானது பித்தநோயினின்றும் தான் நீங்கினபின்னர் முன்கைத்தபாலும் தித்திக்கும்அதனைத்தானுங்கண்டறியுமென்றவாறு.

மலவிருள்தீர்ந்தபின்னர்முன்னர்திரோபவித்து நின்றமருளும் அருள்வடிவாகி வெளிப்படும்அதனையுயிர்களுங் காணுமென்பது பொருள். மாசுதீரின்விளங்கித்தோன்றுந்தன்மையினையுடையது உயிரென்பதற்கு உவமித்துஇதனைத்திருந்திடுநா வென்றருளிச்செய்தார், இதுவும் ஒட்டென்னும் அலங்காரம்.

இதனு லருள்வெளிப்படுங் காலமும் உயிர் அதனைத் திருந்திக்காணுங்காலமும் ஒன்றென்பது கூறப்பட்டது. (உ)

சங. காண்பாளொளியிருளிற் காட்டிடவுந்தான்கண்ட, வீண்பாவ மென்னுய்விடும்.

(எ-து.) ஒளிவடிவாகியஞானம்தன்னைக்கண்டறிதற்பொருட்டுமலவிருளிலே மருண்டுகிடக்கின்றவுயிர்கட்குத் தன்னை வெளிப்படுத்தவும் அதனைநாடாது உயிர்தானேகாண்பதாகக் கண்டமையாலே அறிதேவரும் பாவமென்னபயனைச் செய்ததாய் வந்துமுற்று மென்றவாறு.

ஒரு புலனுணர்வான்வரும் பாவும்போலாது வாளாவருதலின் வீண்பாவமென் றருளிச்செய்தார்.

பித்தம் பாலான்அன்றிமற்றென்றானுந் தீராவாறுபோல, மலமும் அருளாலன்றிப்பிறிதொன்றால்தீராதென்பதும், அருள்மறைந்து நில்லாதுவெளிப்பட்டு நிற்பினும் அந்நாக்குச் சுவைகாண்டல் போலத் தானேகாண்டல்கூடாதென்பதும், இதனுட்கொண்டுகிடந்தவாறுகண்டுகொள்க.

இதனால்அருளைமுன்கொண்டுகாணுக்கால்
குற்ற முடைத்தென்பது கூறப்பட்டது. (௩)

௬௪. ஒளியுமிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவுதெளியார்செயல்.

(எ-து.) பலவாயபொருள்கள்தம்பன்மை தோன்றாது ஒருபடித்தாயிருத்தல் ஒளியின்கண்ணும் இருளின்கண்ணு மொக்கும். தெளிந்துநிற்றலும் மருண்டுநிற்றலுமாயசெயல்கள் அவ்விடத்துப்பேதமென்றவாறு.

இதனா லருளோடுகூடிநிற்றல் ஒருவகை
யாலிருளோடு கூடிநிற்றல்போலுமென்ப
துகூறப்பட்டது. பிறிதொன்றுந்தோன்றா
தென்பதுகருத்து. (௪)

௬௫. கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்
க்கெல்லா, மெடுத்தச்சுமப்பானையின்று.

புண்ணியங்கள் முழுவது மோர்பக்கும்,பாவங்கள் முழுவது மோர்பங்கு மாகப் பொன்னும் இரும்பும் கன்மத்தாற் றுலையொக்கத் தாங்குதல்போலப் பலத்தாற் சமனுதல். சத்தி பதிதலாவது நிலையாத இயல்பினையுடைய வுலகநடையினை யஞ்சி வீட்டுநெறியினை விரும்பும் வண்ணம் உயிர்களது உணர்வினைத்திருந்தச்செய்தல். ஒன்றையொன் றேற்றத் தாழ்வுபடில் அவையவையிகல் செய்திழுக்கு மென்பதாம்.

இதனு லுண்மை யுணர்தற் கேதுவா
னசத்திபதியுமெல்லை கூறப்பட்டது. (௧)

௫௨. ஏகனனேகனிருள்கரும மாயையிரண்
டாகவிவையாறநாதியில்.

(எ - து.) ஒருவனாகிய இறைவனும்அளவில வாகியவுயிர்களும் இருள்வடிவாகிய ஆணவமலமும்சன்மமலமும்சுத்த மசுத்தமென்னு மிருவகைமாயைகளும் ஆகிய இப்பொருள்கள் ஆறும்அநாதியாயபொருள்களென்றவாறு.

அனேகனென்பதில் ஈற்றுமகரம் னகரமாய்த்திரிந்துநின்றது. இவையாறுமென அஃறிணைவாசகங்கொண்டுமிகலினுல் முடிந்ததிணைவழுவமைதி. ஆறுமென்னு முற்றும்மை செய்யுள்விகாரத்தாற்றெருக்கது.

இதனால் நித்தியப்பொருள்களிவையெனத்
தொகுத்துக்கூறப்பட்டன. (௨)

ரு௩. செய்வானுஞ்செய்வினையுஞ்சேர்பயனு
ஞ்சேர்ப்பவனு, மூய்வானுளனென்று
ணர்.

(எ-து.) புண்ணியபாவங்களைப் பண்ணும் புருட
னும் அவனாற்செய்யப்படும் வினைகளும் அவற்றின்
பயனாகிய இன்பதுன்பங்களும் அவற்றைக் கூட்டி
யருத்துமிறைவனு மென்னுமிந்நான்குதிறத்தினையு
டையனாகவுன்னையறிவாயாகமாண வகனே நீ கதி
சேர்தற்பொருட்டென்றவாறு.

இவையுணரா திருக்கவேயானென தென்னுஞ்செ
ருக்கருது பிறவித் துன்பமுறுமென்பதாம். உடைய
னாதலிருவினைகளைச்செய் திறைவனாலவற்றின் பய
னை நுகர்தற்குத்தானுரியனாதல். (௩)

ரு௪. ஊனுயிரால்வாழு மொருமைத்தேயூனோ
டுயிர், தானுணர்வோ டொன்றாந்தரம்.

(எ-து.) உடம்பானது உயிரோடுகூடிப்பிரிப்பின்
றி நடைபெறு மொற்றுமையினையுடைத்து. அவ்
வுடம்பும் உயிரு நிறைந்த ஞானத்தோடு கூடி
யொன்றுபட்டுவேறற நிலைபெறுந் தகுதியவென்ற
வாறு.

பிரளயாகலர்க்குக் கலைநீங்கலாவது, அதன்வயத் தாகாதிருத்தல். குவ்வுருபுவிகாரத்தால் தொக்கது. முதலிருவர்க்குநிராதாரமாகிக் கனையிலருட் பரன் அவிதாசத்திநிபாதத்தால் என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அருள்மானிடச்சட்டைசாத்திவ ருதற்குக் காரணங் கூறப்பட்டது. (௮)

௪௯. ஆரறிவா ரல்லா ரகன்ற நெறியருளு
ம், பேரறிவான்வாராதபின்.

(எ-து.) மந்திரமுதல் கலையீருகியமூவிரண்டிஅத் துவாவுங் கடந்தவீட்டுநெறியினைவெளிப்படுத்தும் நிறைந்த ஞானத்தினையுடைய இறைவனேகுருவுருக்கொண்டுவாராதவிடத்து அதனைஅறியவல்லார் ஆரென்றவாறு.

ஒருவருமில்லையென்பதாம்.

இதனால் நிறைந்த அறிவனாகிய இறைவ னே உருக்கொடு வரினல்லது உண்மை யைபுணர்தல் கூடா தென்பது கூறப்ப ட்டது. (௯)

௫0. ஞானமிவனொழியநண்ணியிடுநற்கல னல், பானுவொழியப்படின்.

(எ-து.) அருள்வடிவாகியகுரவனையன்றியொருவ

ற்குஞானமுண்டாதல்கூடும், ஆதித்தனுலன்றிமாசிலாச் சூரியகாந்தக் கல்லினிடத்து நெருப்புத்தோன்றுமாயின், என்றவாறு. இரண்டுமில்லையென்பதாம்.

இதனுல் திருவடிஞானம் குரவனையின்றியமையாச்சிறப்பிற்றென மேலதுவலியுறுத்தப்பட்டது. (௫0)

அருளுருநிலை முற்றிற்று.

ஆறுவது

## அறியுநெறி.

அஃதாவது, உண்மைப்பொருளையுணருமுறைமை. அருளுருநிலைகூறி அதனுலறியும்பொருளுண்மைகூறுதலின், மேலையதிகாரத்தினேடு இதற்கியையபுடைத்தெனக்கொள்க.

௫௧. நீடுமிருவினைக ணேராகநேராதல்கூடுமிறைசத்திகொளல்.

(எ-து.) ஒன்றையொன்றெவ்வாதுமிக்குவளர்ந்துவரும்புண்ணிய பாவங்களிரண்டும் தம்மிலொப்பாகவரும் பருவத்திலேயுண்டாகுஞ்சிவனுடையசத்திபதிதலென்றவாறு

நேராகநேராதல், ஓர்புண்ணியத்திக்கோர் பாவமோர்வகையாலொத்திருத்தலாம்; அதுவன்றிவாக்குமனங்காயமென்னு மூவகையாலி யற்றப்பட்ட

(எ-து.) நல்லகேண்மையுடையார்க்குத்தம்மேல்பார்முழுதுஞ்சுமத்தச் சுமக்குமொருவனே யிப்பொழுதேகிட்டுதல்கூடுமென்றவாறு.

நற்கேண்மையென்றருளிச்செய்தார் அருளோடு கூடியதென்பதற்கு.

இதனால் அருளாகுங்கேண்மையினையுடையாற்குத் தன்னையடைந்தார் வினைகளெல்லாம் அவரைத்தொடராததன்செயலாகக் கொள்ளுஞேயம் வெளிப்படுத லெளிதென்பது கூறப்பட்டது.

"சிவனு மிவன்செய்தியெல்லா மென்செய்தியென்றும்செய்ததெனக்கிவனுக்குச்செய்ததென்றும்பவமகலவுடனாகிநின்று கொள்வன் பரிவாற்பாதகத்தைச்செய்திடினும்பணியாக்கிவிடுமே" என்றருளிச்செய்தவாறுகாண்க. (௫)

௬௬. வஞ்சமுடனொருவன் வைத்தநிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்.

(எ-து.) ஒருவன் சேமித்த பொருளினை ஒருவன் களவினால் கவர்ந்துகொண்டேக மற்றவனுறங்குதல்செய்தானோ? அவ்விடம்விட்டுநீங்குதல்செய்தானோ? மாணவகனே சொல்வாயாகவென்றவாறு.

அதுபோலக்கேடின்றிநிரம்பிநிற்குஞான சத்தியினைவஞ்சித்து அதன்முதலாயனே

யத்தினை யுடைத்தாதல் அரிதென்பது இ
தனாற்கூறப்பட்டது.

இதுவும், முன்னரதுவும் ஒட்டென்னுமலங்காரத்
தாற்கூறப்பட்டன. (௬)

௬௭. தனக்குநிழலின்று மொளிகவருந் தம்ப
மெனக்கவரநில்லா திருள்.

(எ-து.) தனக்கெனவேறோரொளி தோன்றாதவ
ண்ணம் சூரியகிரணத்தாற்கவர்ந்துகொள்ளும்படிக
த்தூண்போல ஆன்மாதன்னுடையபோதந் தோன்றா
துநிற்கும்வண்ணம் அருள்கவர்தலைச்செய்யு மாயின்
அந்நிலையேயிருளானதுதன்பால்நிலைபெறாது நீங்கு
மென்றவாறு.

சூரிய கிரணத்தினுள்ளே தன்னைக் கொடுத்துநிற்
கும் படிகம்போல ஆன்மாவுந் தன்னையருளினுள்
ளேகொடுத்து நிற்றல்வேண்டுமென்பதாம்.

இதனால்ஆன்மாவை அருள்தன்வயத்தாக்
குமாறுகூறப்பட்டது. (௭)

௬௮. உற்கைதரும்பொற்கையுடையவர்போ
லுண்மைப்பி, னிற்கையருளார்நிலை.

(எ-து.) தழற்கொள்ளியினைப்பிடித்திருக்குமழகிய
கையினையுடையோர் தாம்வேண்டிய பொருள்களை
க்காணுமளவும் அதனைமுன்னிட்டுத் தாம்பின்னிற்கு

மாறுபோல, ஞேயமானது வெளிப்படுமளவும் அரு ளைத் தமக்கு முன்னாக்கித் தாம் அதன்பின்னிற்றலே யருளோடுகூடிநிற்கு நிலையாவது என்றவாறு.

இதனா லருளோடு பொருந்திநிற்கு முபாய
ங் கூறப்பட்டது. (அ)

௬௯. ஐம்புலனாற் றுங்கண் டதன்று லதுவொ
ழிய, வைம்புலனார் தாமா ரதற்கு.

(எ - து.) மெய் வாய் கண் மூக்குச் செவிகளால் தாம்கண்டறிந்த விடயங்களுள் ஒன்றல்லவாயின் அ வ்வருளானே யன்றிப் பேரின்பமாகிய நேயத்தினை யடைதற்கு அவ்வைம்பொறிகள்தான் ஆர்? உயிர்கள் தாம் ஆர்! என்றவாறு.

சுட்டிறந்து நின்றமையா லிவர்க்கடைதலுரிமை
யில்லையென்பார் ஆறொன்றருளிச்செய்தார். (௯)

எ0. தாமே தருபவனைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு.

(எ - து.) ஒருபொருளினை ஒருவற்குத் தாமே கரு த்தாக நின்று விரும்பித்தருதற்கு உரியானைத் தம்வ லியால் தந்தவராக நினைத்தல் முறைமையன்றே யா

தலால் அவ்வருளாற்பெறும் பேரின்பத்திற்கு அப்பே ற்றினையடைய நிற்கும் இவன் யாரென்றவாறு.

இவை யிரண்டுபாட்டானும் பேரின்பமாவ தருளாலேயன்றிக் கரணங்களோடு கூடியு ம் தனித்தும் உயிர்களால் அடையப்படா தென்பது கூறப்பட்டது. (௭௦)

உயிர்விளக்க முற்றிற்று.

எட்டாவது

## இன்புறு நிலை.

அஃதாவது ஆன்மலாபமடையு முறைமை. ஆன்ம சுத்திகூறியபின்னர் அதனாலெய்தும் பயன்கூறினமை யின், மேலையதிகாரத்தினோடு இதற்கியை புடைத்தெ னக்கொள்க.

௭௧. இன்புறுவார்துன்பா ரிருளினெழுஞ்சுட ரின், பின்புகுவார் முன்புகுவார் பின்.

(எ - து.) முன்னர்ஞானத்தினைப் பின்னிட்டுத் தா மதற்கு முன்செல்வாராகித் துன்புற்றவரோ பின்னர் மிக்க துன்பினைச்செய்யு மலவிருளிலே நின்று மெழு

ந்தனான விளக்கினை முன்னிட்டுத் தாமதன்பின் செல்வாராகிப் பேரின்பத்தினை யடைவானொன்றவாறு.

துன்பவின்பமடைதற்குக் காரணஞானத்திற்கு முன்பின் சேறலாயிற்று. சுட்டுற்று நின்றவர்க்கும் வீடடைபவர்க்குந் தம்முள் வேற்றுமை யிவையென்பதுமாம்.

இதனாற் பேரின்பத்தையெய்துவா ரிவரொன்பது கூறப்பட்டது. (க)

எஉ. இருவர்மடந்தையருக் கென்பயனின்புண்
டா, மொருவ னொருத்தியுறின்.

(எ - து.) இரண்டுபேர் மகளிர்க்குத் தம் புணர்ச்சியால் வரும்பயனென்னை ! ஓர் புருடனு மோர் மகளுந்தம்மிற் புணர்வாராயினன்றே யின்பமுண்டாவதென்றவாறு.

உயிர்க்கும் அருட்குமுதலாய நேயம் வெளிப்படின் அல்லது இன்பமுண்டாகா தென்பதுபொருள். ஒருவனொருத்தியென்னும் உவமம் தலைமையும் தன்மையும் பற்றிவந்தது. இதற்கிவ்வாறன்றி யுயிரினைப் பெண்ணியல்பினதாகவும் இறைவனை யாணியல்பினதாகவும் அறிவில்லார் கூறுமது பொருளன்று, அன்னவிய

ற்கை அசேதனவடிவிற்கல்லது சேதனவடிவிற் கின்று ஆதலான். இதனுற் பேரின்பத்தினையெய்து மெல்லைகூறப்பட்டது (உ)

எங. இன்பதனையெய்துவார்க் கியுமவர்க்குருவ, மின்பகன மாதலினு லில்.

(எ-து.) தன்னைவந் தடையுமவர்க்குப் பேரின்பத்தினை வழங்கும் அவ்விறைவன் தனக்கு வடிவம் ஆனந்தமயமாதலால், தான் தன்னை நுகர்வதில்லையென்றவாறு.

அனுதியே யாணவமலத்தால் மறைப்புண்டு அது நீங்கி யிப்பொழுது நவமாகவந்ததுபோலக் கருதுமுயிர்கள்போலாது, இறைவன் அனுதி மலமுத்தனுதலான் அவற்கில்லை யென்றருளிச்செய்தார். புதிதாகவந்ததன்றென்பது கருத்து.

இதனு லுயிர்களுக்குக் கொடுப்பதன்றி யிறைவன்தானு மிவ்வின்பத்தினை நுகர்வனே வென்னுஞ் சங்கையினையகற்றிக் கூறப்பட்டது. (ங)

எச. தாடலைபோற் கூடியவை தானிகழாவேற்றின்பக், கூடலைநீ யேகமெனக்கொள்.

(எ - து.) தானுந்தலையுமென்னுஞ் சொல்லிரண்டுந் தம்பொருள் பிரிந்துதோன்றுது பொருந்தியவாறு போற் பொருந்திப் புணர்ச்சிகட் கொருகாலு முண்டாகாத வேற்றுமையினையு மின்பத்தினையுமுடைய கலப்பினை யிறைவனேடொன்றுக லெனக்கொள்வாயாக மாணவகனே யென்றவாறு.

அச்சொற்கள் ஒரொருகாற் பிரிதலும் புணர்வாற்றும்பெறும் பயனின்மையுங் கருதி யிவைபன்ன வல்லவென்பதற்கு நிகழாவேற்றின்பக் கூடலென் றருளிச்செய்தார். தானுந்தலையுமென்னுஞ் சொற்களாற் கூறியது உயிரினது தாழ்வு மிறைவனது உயர்புங்காட்டுதற்காம்.

இதனுல் ஞேயத்தழுந்தி யொன்றுபட்டு நிற்குநிலை கூறப்பட்டது. (ச)

எரு. ஒன்றுனுமொன்று திரண்டாலு மோசை
யெழா, தென்றுலொன் றன்றிரண்டுமில்.

(எ - து.) இறைவனையு முயிரினையு மொன்றென் போமாயினும் பின்னர்ப்பொருந்த வேண்டுவதில்லை யிரண்டென்போமாயினுந் தம்முட்டாக்கிய வொலி

யெழுதலைச் செய்யாதாதலா லொருபொருளுமல்ல விரண்டாவது மில்லையென்றவாறு.

இதனு லிறைவனையு முயிரினையும் ஏகமென்பாரையும் இரண்டென்பாரையு மறுத்து அத்துவிதங் கூறப்பட்டது. அத்துவிதமாவது தம்மிற் கலப்பாலன்னியமா யிருத்தல். (ரு)

எசு. உற்ருரும்பெற்ருரு மோவா ருரையொ
ழியப், பற்ருருமற்ருர் பவம்.

(எ - து.) பேரின்பமாகிய முத்தியினை யடைந்தாரும் அதற்குநேரே காரணமாகிய சமாதியை யடைந்தாரும் மெய்ப்பொருளினை யொருகாலு நீங்குதல் செய்யார் அவ்வாறு வாக்கிறக்கும்படி அதனைப்பற்றி நில்லாதாரும் பிறப்பினை யற்றவரொன்றவாறு.

உரையொழியப் பற்ருரென்றதனுல் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய நிலையின்கண் நிற்பரென்பதாம். பிறப்பற்ருரென்பது பதமுத்திகளை யடைவரென்பது கருத்து.

இதனுல் வீட்டினையடைவாரது வகைமை கூறப்பட்டது. (சா)

எஎ. பேயொன்றுந்தன்மை பிறக்கு மளவுமி
னி, நீயொன்றுஞ் செய்யாது நில்.

(எ - து.) பேய்பிடியுண்டோரது தன்மை யுனக்கு
ண்டாமளவு நீ மேல் யாதொரு செயலுஞ் செய்யா
தசைவற நிற்பாயாக வென்றவாறு.

பேய்பிடியுண்டாரது செயலெல்லாம் பேயின்செய
லா மாறுபோல வுன்செயலனைத்தும் இறைவன்செய
லாமளவு மென்பதுகருத்து; பின்னுராதனையின்றெ
ன்பதாம். இனியென்றதனுன் முன்னர்ச்செய்யவேண்
டுவவனைத்துஞ்செய்து முற்றியதென்பதும் பின்னிலை
க்குச் செயலின்மையே வேண்டுவதென்பதுங் கண்டு
கொள்க.

இதனுற் சமாதிசெய்வோர்க்கது முதிர்ந்து
கைவருமென்பது கூறப்பட்டது. (எ)

எஅ. ஒண்பொருட்க ணுற்றூர்க் குறுபயனேய
ல்லாது, கண்படுட்போர் கைப்பொருள்
போற் காண்.

(எ - து.) ஒள்ளியதாய மெய்ப்பொருளினது எல்
லையைத் தலைப்பட்டார்க் கவ்விடத்தெய்தும் பேரின்
பமேயன்றி மற்றுள்ள யோகமுதலிய தொழில்கள்

யாவும் உறங்குவோர்கையிற் பண்டம்போல மெல்லெனத் தன்வயத்திலே நீங்குவதாக வறிதியென்றவாறு.

தாமேவலிது நீப்பதன்றென்பதாம்.

இதனாலவர் சமயாசாரம்நீங்கு முறைமை கூறப்பட்டது. (அ)

எகூ. மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுய ங்கித், தோன்றாத வின்பமதென் சொல்.

(எ - து.) ஞாதுரு ஞானஞேயமென்று மூன்றுவகைப்பட்ட தன்மையுஞ் சிவசிவபாவங்களிரண்டுந் தம்மின்மிகவுங் கூடியகலப்பினாற் றோன்றுதலைச்செய்யாத வின்பமவ்விடத்து வாராததையா தென்றவாறு.

இதனா லவ்வானந்தமிகுதியின் அதிசயங்கூறப்பட்டது. (க)

அ0. இன்பிலினிதென்ற வின்றுண்டேலின்றுண்டா, மன்பி னிலேயே யது.

(எ - து.) எல்லாவின்பங்களினு மினிமையுடைத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பேரின்பமாவதொருவற்கன்பென்ப திப்பொழுதுண்டாயினு மிப்பொழு

தே யுளதாமது மிக்கவன்பினது நிலையே தனக்குநிலை யாக வுடையதாதலா னென்றவாறு.

இன்னென்றபொதுமைபா லமிர்தநுகர்ச்சி முதலா யினவெல்லா மடங்கும். ஏகாரந் தேற்றம்.

இதனு லன்புடையார்க்கு மப்பேரின்ப மெ ளிதினி னெய்துமென்பது கூறப்பட்டது. (கூ0)

இன்புறுநிலை - முற்றிற்று.

ஒன்பதாவது

## ஐந்தெழுத்தருணிலை.

அஃதாவது ஐவகைப்பட்ட திருவெழுத்தாகிய அரு ளினது முறைமை. இதனையுமோர் திருவருளாகக் கூ றியருளினூர் வீட்டுநெறிகாட்டுதலால்; அவ்வாறே ச மாதியினையடைதல் கூடாதார்க்கிதனை விதிப்படியோ தவே யந்நிலைகூடுமாதலின், மேலை யதிகாரத்திறுேடி யையுடைத்தெனக்கொள்க.

அக. அருணூலு மாரணமு மல்லாதுமைந்தி
ன், பொருணூ றெரியப் புகின்.

(எ-து.) சைவாகமங்களினது கருத்தினையும், வே தங்களினது கருத்தினையும், இவை யிரண்டுமல்லாத

பலகலைகளினது கருத்தினையும், கற்றுவல்லோ ராயப் புகுவாராயின், அவையெல்லாந் திருவெழுத்தைந்தின் பொருளாகிய பதி பசு பாசங்களைச் சொல்லுநூல்க ளாம் என்றவாறு.

இதனாலெல்லா நூற்பொருள்களும் இவ் வைந்தெழுத்தினுள்ளே யடங்குமென்பது கூறப்பட்டது. (க)

அ௨. இறைசத்திபாச மெழின்மாயை யாவி யுறநிற்கு மோங்காரத் துள்.

(எ-து.) சிவனும், சத்தியும், ஆணவமும், அழகுடைத் தாய மாயையும், ஆன்மாவும், ஆகியஐந்தும் ஐந்தெ ழுத்தோரெழுத்தாகிய பிரணவத்தினுள்ளே யமைந்து நிற்குமென்றவாறு.

இதனால் பிரணவமென்று பேர்பெற்றுநிற்கு நுண்ணிய வைந்தெழுத்தி னியல்புகூறப்பட் டது. (௨)

அ௩. ஊனநடன மொருபா லொருபாலா ஞானநடந் தானடுவே நாடு.

(எ-து.) பிறப்பினைவிளைக்கு நகார மகாரமாகிய கூ த்தொரு மருங்காகவும், வீட்டினை யுதவுஞ் சிகார வகா

ரங்களாகிய கூத்தொரு மருங்காகவும், யகாரமாகிய ஆன்மா இவ்விருவகைக்கு நடுப்பட்ட தொன்ருகவும், விசாரித்தறிவாயாக வென்றவாறு.

கூத்தென்றது, உயிர்களைப் பெத்தமுத்திகளி லுய்த்து நடத்தலை.

இதனு லைந்தெழுத்தின் பொருளியல்பு கூறப்பட்டது. (ங)

அச. விரியமல மேவியவை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்.

(எ - து.) மகார நகாரமாகிய மலமும் திரோதமு மிகவுமிறுகப்புணர்ந்து, யகாரமாகிய வுயிர்களைத்திரும்பிவிடா; அவ்வுயிர்கள், தம் பெரிய பிணியாகிய மலவிருள்தீருங்கால், சிகாரமாகிய சிவத்தினை யடையுமென்றவாறு.

மலந்தீரவே திரோதந்தானே நீங்குமென்பதாம். வினையென்பது ஈண்டுப் பிணியென்னும் பொருள்தந்து நின்றது.

இதனுல் கட்டுவீடென்னு மிரண்டும் ஐந்தெழுத்தினுனே யமையுமென்பது கூறப்பட்டது. (ச)

அரு. மாலார்திரோத மலமுதலா மாறுமோ
மேலாகி மீளா விடின்.

(எ-து.) மயக்கத்தினைப்பொருந்திய திரோதானமு மலமுமாகிய நகார மகாரம் இரண்டும் ஆதிக்கண்ணவாக வுச்சரிக்கி லவைகள்நீங்குமோ விவற்றைக் கீழாக்கிச் சிவமாகிய சிகாரமேலாம் வண்ணமாக வுச்சரியாதொழியி னென்றவாறு.

இதனுல் நகார மகாரங்கள் முதலாக வுச்சரித்து வழங்குவது வீட்டினையடைவோர்க்காகாதென்பது கூறப்பட்டது. (ரு)

அகூ. ஆராதியாதார மங்தோ வதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

(எ-து.) தமக்காதாரமாருக வெண்ணியோவவ்வாறுச்சரித்தலால் வரும்பழுதினைத்திரும்பி விசாரியாமலந்தோ நகார மகாரங்கள்மேலாக வுச்சரிக்கும் விருப்பமென்றவாறு.

இதனு லவ்வாறோதுவார் துணையின்றித் துன்புறுதற்கிரங்கிக் கூறப்பட்டது. (கூ)

அஎ. சிவமுதலேயாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

(எ-து.) சிகார வகாரமென்னு மிரண்டு மாதிக்கண் ணவேயாம் வண்ணமுச்சரித்தல் கூடுமாயின், அந்நிலே யே யுனது பிறவித்துன்பநீங்கு மாணவகனே வீட்டி னைக்காமுற்றநீ யுச்சரிக்கு முறைமை யிது வென்ற வாறு.

இதனால் முத்தரோதுமாறு கூறப்பட்டது. (எ)

அஅ. வாசியருளியவை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு.

(எ-து.) அவ்வா றுச்சரிக்குங்கால், வகாரமாகிய வ ருள் சிகாரமாகிய சிவசத்தியினைக்காட்டி, யகாரமாகி யவுயிரினை வீட்டின்பத்திலே யிருத்துமன்றியும் அவ்வ ருளேயந்தச் சிவத்திற்குக் குற்றந்தீர்ந்த திருமேனியா யிருப்பது மென்றவாறு.

இதனாற் றிருவெழுத்தைந்தில் வகாரமாகிய வருளினது தன்மை வகுத்துக் கூறப்பட் டது. (அ)

அகூ. ஆசினவாநாப்ப ணடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

(எ-து.) குற்றந்தீர்ந்த திரோதானமும் அருளுமாகி ய நகார வகாரங்கட்கு நடுப்பட்டு நில்லாது வகார மாகிய வருளினாலே யகாரமாகிய வுயிர் அவ்வகாரத்

திற்குஞ் சிவமாகிய சிகாரத்திற்கு நடுப்பட்டுநிற்பது முறைமையென்றவாறு.

அவ்வாறதற் கெழுத்துக்களைமாறி யுச்சரிப்பது குரு முகத்தாற் றெளிந்துகொள்க. ஆன்மாவைமறைக்கும் பாசங்களைச் செலுத்துவதன்றி திரோதானசத்தி தானுகமறையாதென்பதற்கு ஆசினவென் றருளிச்செய் தார்.

இதனாற் றிருவெழுத்தினைக் கூறியமுறை மையின் ஓதுவோ ரடைந்துநின்ற நிலைகூ றப்பட்டது. (௯)

௯0. எல்லாவகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(எ-து.) எவ்வகைப்பட்ட வுபாயங்களினையு நூல்க ளுரைக்கும், இவ்வான்மாவானவன் சிவசத்தியினைநீங்கி நில்லாதுடனுய்நிற்குந் திறத்தினைக் கருதியென்ற வாறு.

இதனலறியு நெறிமுதல் இவ்வதிகாரமீருன நான்கதிகாரத்தினது கருத்துந்தொகுத்துக் கூறப்பட்டது. (௪0)

ஐந்தெழுத்தருணிலை முற்றிற்று.

பத்தாவது

## அணைந்தோர் தன்மை.

அஃதாவது இவ்வகைப்பட்ட சமாதியினை யடைந்தோரது தன்மை. மேலையதிகாரங்களாற் சமாதிகூடு முறைமைகூறி, யது கூடினோரது தன்மை யிதனாற் கூறுதலி னவற்றோ டிதற்கியை புடைத்தெனக்கொள்க.

கூக. ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்தி னின்
பொடுங்கத், தூங்குவர் மற்றேதுண்டு
சொல்.

(எ-து.) நிறைந்த ஞானத்தினுள்ளே தாம்அடங்கித் தம்மறிவினுள்ளே பேரின்பமடங்கும்படி யானந்த நித்திரைபண்ணுநிற்பர், பிறவார்த்தையாதுளதா மென்றவாறு.

அவ்வின்பம் இறைவற்கின்றி யுயிர்கள்தாமே நுகர்தலின், உள்ளத்தி லின்பொடுங்கவென்று ஞேயத்தழுந்தினு ஞானத்தின்மிக்கா ரல்லரொன்பதற்கு ஓங்குணர்வினுள் ளடங்கியென்று மருளிச்செய்தார்.

இதனாலவர் ஞேயத்தழுந்திநிற்கு மியல்பு
கூறப்பட்டது. (க)

௬௨. ஐந்தொழிலுங்காரணர்க ளாந்தொழிலும்
போகநுகர், வெந்தொழிலு மேவார் மிக.

(எ - து.) பரமசிவனாற் செய்யப்படும் படைப்பு நிலையிறுமறைப்பு அருளென்னும் ஐந்தொழில்களையு மொருங்கேசெய்தலும் அயன் மால் உருத்திரன் மகேசன் சதாசிவனென்னு மிவரிலொருவற்கு மோரோவொரு தொழிற்செய்தலு மாயாபோகத்தினையருந்தும் பிறப்பிற்கேதுவாகிய வெய்யதொழிலினைச்செய்தலுஞ் சிறிதும் பொருந்தா ரவ ரென்றவாறு.

அசஞ்சலமா யகண்டமா யொழிவற நிறைந்த ஞானத்தினராய்நின்றும் பரமானந்தத்தினை யனுபவித்திருக்கு மொன்றிற்குமே யுரியாரென்பது கருத்து. மிகவென்பது குறிப்புமொழியாய்ச் சிறிதுமென்னும்பொருள்விளங்கநின்றது. "உயிர்தானுஞ் சிவானுபவமொன்றினுக்கு முரித்தே" யென்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனாலவர் மற்றொரு தொழிற்கு முரியா ரல்லரென்பது கூறப்பட்டது. (௨)

௬௩. எல்லாமறியு மறிவுறினு மீங்கிவரொன் றல்லாதறியா ரற.

(எ-து.) இயல்பினன் முழுவதூஉ முணருஞானமான து வெளிப்பட்டுத் தம்மை யிரண்டறக் கலந்துநிற்பினு மிவ்விடத்திந்தச் சீவன்முத்தரானவ ரானந்தஞானமொன்றுமேயன்றிப் பிறிதொருபொருளினையுஞ் சிறிதுமறிதல் செய்யாரென்றவாறு.

அறவென்பது மிகவென்பதுபோலக் குறிப்புமொழியாய்நின்றது. சீவன்முத்தர் சிவமொன்றுமேயன்றிப் பிறிதொன்று மறியாராகவே பரமுத்தருமவ்வாறுதல் கூறவேண்டாவா றுயிற்று.

இதனுலவர் பிறிதொன்றுமறியா தெவ்விடத்துஞ் சிவமே கண்டிருத்தல் கூறப்பட்டது. "பரஞானத்தா லென்பதனுள் சீவன்முத்தர் பரமே பார்த்திருப்பார்" என்றருளிச் செய்தவாறுகாண்க. (௩)

கூசு. புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவ
போதார், தலனடக்கு மாமை தக.

(எ - து.) ஓர்விடய மெதிருங்கால் அதற்கஞ்சி யதன்மேற்செல்லுந் தம்முணர்வினை மாற்றித் தமதுமுதலாகிய ஞேயத்தினிடத்திலே புக்குப்பொருந்தி மறித்துநீங்குதல் செய்யார் அவர்; பூமியின்கண்ணே நட

ந்துசெல்லுங்கா லொருவரொதிர்ப்படி னவரையஞ்சித் தன் றலையினைச் சுரித்துள்ளேவாங்கி யசைவறக்கிடக் கு மாமையினை யொப்ப ரென்றவாறு.

ஆமை பின்ன ரெதிர்ந்தோரகலுங்காற் றன்றலையி னை வெளிப்படுத்துச் செல்லுமதுபோ லிவர் வினாவிற் றிரிவுபடாமையிற் போதாரென் றருளிச்செய்தார்.

இதனாலவர் புலனுணர்வுக்கஞ்சி யகலுமா று கூறப்பட்டது. (௪)

௬௫. அவனையகன் றெங்கின்று மாங்கவனுமெ ங்கு, மிவனையொழிந் துண்டாத லில்.

(எ - து.) இறைவனைநீங்கி யெவ்வுலகமு நிற்பதில் லை யதுபோல விறைவனைதலடைந்த விம்முத்தான் மாவையன்றி யெவ்விடமுமுளதாய் நிற்றலில்லை யெ ன்றவாறு.

இவனு மிறைவனைப்போல வியாபகனாய் நிற்குமெ ன்பதாம். "காயங்கழிந்தக் காலெங்குமாய்க் கருதா ன்போனிற்பன்" என்றருளிச்செய்தவாறுகாண்க.

இதனாலவர் சிற்றறிவுநீங்கிப் பேரறிவுடை யராவரென்பது கூறப்பட்டது. (௫)

௬௬. உள்ளும்புறம்பு மொருதன்மைக் காட்சி
யருக், கௌ்ளுந் திறமேது மில்.

(எ - து.) அகமும்புறமு மொருதன்மைத்தாய் நிற்கு ஞானத்தினை யடைந்தோருக்கொன்றனை யிகழ்ந்திடும்வண்ண மெவ்வாற்றானு மில்லையென்றவாறு.

இதனு லவர்க்கெல்லாப்பொருள்களு ஞானமாயேதோன்றுதல் கூறப்பட்டது. (௬)

௬௭. உறுந்தொழிற்குத்தக்க பயனுலகந் தத்தம், வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

(எ - து.) தன்னையாற்றிய தலைவனைப் பின்றொடர்ந்துசூழும் யானெனதென்னுஞ் செருக்காற்செய்யப்பட்ட வினைக்கேற்ற பயனுவ துலகவாழ்க்கைகள்; செருக்கினைநீங்கித் தம்மை யிகழ்ந்தோர்செய்யுந் தானந் தவமுதலிய தொழிற்குவரும் பயனுவ தழிவில்லாத வீட்டின்பமே யென்றவாறு.

தக்கபயனென்றதனுற் பயன்பலவாயிற்று. வறுந்தொழிலென் றருளிச்செய்தார், தொடர்ந்துபயன் வழங்காமையின். இதனுலவரோர் தொழிலினைச்செய்யினும் பிறிதொருகாமியத்தினைக் கருதிச்செய்யாரென்பது கூறப்பட்டது. (எ)

௯அ. ஏன்றவினையுடலோ டேகுமிடை யேறு
ம்வினை, தோன்றி லருளே சுடும்.

(எ - து.) பக்குவப்பட்டமைந்த வினையான துடம்பிற் கமைத்தகால வரையறையிலே தொலையு மிடைப்பட்ட காலத்தில்வந்து பொருந்தும் வினைகளுளவாயி னருளென்னு நெருப்பினாலே வெந்துபோ மென்றவாறு.

சஞ்சிதம்நீங்காமல் ஞானம் வெளிப்படா ததுவெளிப்படாதாகவே யாகாமியந் தீர்வதில்லை யதனை யருளே சுடுமென்பதனாற் சஞ்சிதமு நீங்கிற்றென்பதுதானே போதருமெனக்கொள்க. தோன்றிலென்பதனாலதுதோன்றாதவண்ண மிடையறாதருளோடு நிற்பரொன்பது கருத்து.

இதனா லவர்க்கு வினைத்தொடர்பின்றுமாறு
கூறப்பட்டது. (அ)

௯௯. மும்மை தரும்வினைகண் மூளாவா மூதறிவார்க், கம்மையு மிம்மையே யாம்.

(எ - து.) இம்மை யம்மை மறுமையென்னு மூவகைப்பயனையுந்தரும் வினைகள்யாவுந்தொடரா; தம்மேலாய வறிவினையுடையார்க்கும் பிறந்தெய்துமின்ப

மு மதனோடு கூடிநிற்கவே யுளதாமாகலா னென்ற வாறு.

இம்மை யிப்பிறப்பு; அம்மை மேலுலகினையடைத ல்; மறுமை மறித்து வரும்பிறப்பு. உடம்பிறந்தகாலத் துநிலைவேறு படுதலின்மைநோக்கி யம்மையு மிம்மை யேயாமென் றருளிச்செய்தார்.

இதனு லவர்க்குச்சிறிதும் வினைத்தொடர்பி ன் றென்பது வலியுறுத்தப்பட்டது. (கூ)

க00. கள்ளத்தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

(எ - து.) யானெனதென்னும் வஞ்சத்தலைமையினை யுடைய வான்மாக்கள் படுந்துன்பத்தினை யெண்ணித் தம்மிடத்தெழுந்த கருணையாகிய கடலினுள்ளே மிக வு மலைதலைச் செய்வரென்றவாறு.

அலைத லிரக்கத்தாற் றளர்தல்.

இதனு லவர்வீட்டினை விரும்பாத வுயிர்கள் மாட்டிறைவன்போ லருளுடையராதல் கூ றப்பட்டது. (க0)

அணைந்தோர்தன்மை முற்றிற்று.

திருவருட்பயன் மூலமுமுரையும் முற்றும்.

சிவமயம்.

# புத்தக விளம்பரம்.

——(*)——

| | ரூபா. | அணா. |
|---|---|---|
| ஞானபானு முதல்புத்தகம்...... | உ | ச |
| ஞானபானு உ-வது புத்தகம்... | உ | ச |
| தாயுமானசுவாமிகள்பாடல்... ... | க | 0 |
| கல்லாட மூலமுமுரையும்... ... | ௩ | 0 |
| சிவப்பிரகாச மூலமுமுரையும்.... | க | அ |
| சிவஞானசித்தியார்சுபக்ஷ மூலமுமுரையும்... ... ... | க | ச |
| சிவஞானபோதச் சிற்றுரை... ... | க | 0 |
| திருவருட்பயன் மூலமுமுரையும் | 0 | ௬ |
| பாலபோத விலக்கணம்... ... | 0 | க0 |
| பரமராசியமாலை... ... ... | 0 | கஉ |

இப்புத்தகங்கள் வேண்டியவர்கள் சென்னபட்டணம் குஜ்ஜிலிக்கடைத்தெருவில் வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்தில் ஞானபானு பத்திராதிபரிடத்தில் வாங்கிக்கொள்ளலாம்.

ஆங்கீரசஹு தைமீ.